[12th February 1959

*Malayan repatriates*

* 263 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the arrangements made for the rehabilitation of Malayan repatriates in this State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have not received any representations from the Malayan repatriates or reports from the Collectors indicating the need for their rehabilitation. The question does not therefore arise.

SRI N. K. PALANISAMI : மலேயாவிலிருந்து திரும்பி வந்தவர்களுக்கும் சிலோனிலிருந்து திரும்பி வந்தவர்களுக்குக் கொடுக்கக்கூடிய சலுகைகள் கொடுக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தக் கேள்வி, செக்ரடேரியட்டுக்கு வந்தபோது, கலெக்டர்களுக்கெல்லாம் எழுதி, "யாராவது ரிப்பாட்ரியேட் ஆனவர்களுக்கு இம்மாதிரி உதவி வேண்டுமென்று கேட்டிருக்கிறார்களா ?" என்பதுபற்றி தகவல் தெரிந்துகொள்ளப் பார்த்தோம். ஆனால், "அம்மாதிரி கோரிக்கை யாரிடமிருந்தும் வரவில்லை" என்று கலெக்டர்கள் பதிலளித்துவிட்டார்கள். ஜனங்களுக்கு ஏதாவது உதவி வேண்டுமென்றால் முதலில் கலெக்டர்களுக்குத் தெரிவிக்கவேண்டும்.

*Nationalization of cinema theatres*

* 264 *Q.*—SRI S. B. ADITYAN (on behalf of Sri T. Veluchami) : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to nationalize cinema theatres?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI K. ANBAZHAGAN : அரசாங்கத்திற்குப் போதுமான வருமானம் இல்லை என்ற காரணத்தால் பல்வேறு தனியார்த் துறை தொழில்களைக்கூட பொதுத் துறைக்குக் கொண்டுவரவேண்டும் என்ற கருத்தினை தெரிவிக்கின்ற இந்த அரசாங்கம், சினிமாத் தியேட்டர்களையும் எடுத்து நடத்துவார்களானால் அதிக வரும்படி கிடைக்கும். சினிமாத் தியேட்டர்களையும் தாங்கள் மேற்கொண்டு நடத்துவதற்கு ஏன் முன் வரக்கூடாது ? அப்படி முன் வருவது அரசாங்கத்திற்கு மிக்க வருமானத்தைத் தரும் அல்லவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கத்தின் வருமானத்தைப் பெருக்கிக் கொள்வதற்கு எத்தனையோ வழிகள் உண்டு. அந்த வழிகள் எல்லாம் ஆராயப்படுகின்றன. ஆனால், சினிமாத் தியேட்டர்களை தேசியமாக்கவேண்டும் என்ற யோசனை அரசாங்கத்திடம் இல்லை.

9-40 a.m. MR. SPEAKER : கேள்வி எண் 265.

SRI S. LAZAR : ஸார், ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர். இப்பொழுது பதில் சொல்லப்படப்போகிற கேள்வியானது கனம் டி. வேலுசாமி அவர்களால் கேட்கப்பட்டிருக்கிறது. அவருடைய தேர்தல் செல்லாது என்ற முறையில் தீர்ப்பளிக்கப்பட்டதாகத் தெரிய வருகிறது. அவர் ஏதாவது ஸ்டே ஆர்டர் வாங்கியிருக்கிறாரா. அவர் கேட்டிருப்பது எந்த அளவில் சரி என்பதை தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

MR. SPEAKER : Your information is not correct. He has got 30 days' time to file his appeal.